9th September 1960]

that under the 1959–60 and 1960–61 scheme will be made by about January 1961, having regard to the last dates for completion of wells under the scheme.

(b) & (c) Do not arise.

SRI P. G. MANICKAM : சென்ற வருஷம் ஆயிரம் ரூபாய் கொடுக்கப் பட்டதில் இணற்று வேலை பூர்த்தியடையாததனுல் சம்பந்தப்பட்ட அதிகாரி கள் அவர்களிடமிருந்து அந்தத் தொகையை வசூலிக்க நடவடிக்கை எடுத்து வருவதாகத் தெரிகிறது. ஆனுல், இந்த வருஷம் 1960–61-ல் இரண்டாயி ரம் ரூபாய் கடனுகவும், 500 ரூபாய் மானியமாகவும் கொடுக்கப்படுகிறது. 1959–60-ல் கடன் கொடுத்து வேலை பூர்த்தியாகாமல் இருப்பவர்களிட மிருந்து அந்தத் தொகையைத் திரும்பப் பெறுமல் அந்த வேலை பூர்த்தியாகும் அளவுக்கு மேலும் கடன் தொகை அளிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தந்த வருஷத் திட்டத்தின்படி அது அமுல் நடத்தப்படுகிறது. இதில் ஏதாவது கஷ்டம் இருப்பதாகத் தெரியப்படுத்தினுல் அவ்வப்போது பரிசீலிக்கப்பட்டு வேண்டிய பரிகாரம் அளிக்கப்பட்டு வருகிறது.

*Strike*

*572 Q.—SRI P. S. CHINNADURAI :
SRI A. VEDARATHNAM :
SRI N. K. PALANISAMI :
SRI S. PAKKIRISAMI PILLAI : } : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா :—

(அ) 1960, ஜூலை மாதம் 11-ம் தேதி நள்ளிரவு முதல் நடை பெற்ற மத்திய சர்க்கார் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தின்போது இந்த ராஜ்ய சர்க்காருக்கு பணச் செலவு ஏற்பட்டதா ?

(ஆ) அப்படியானுல், எவ்வளவு தொகை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) The expenditure incurred on the various measures taken by the State Government to protect Central Government properties and vital installations, and loyal workers and their families, and to maintain essential services, during the recent strike by the Central Government employees, is being reimbursed by the Government of India. Full details of the expenditure incurred have not yet been received, but the expenditure so far reported is about Rs. 3½ lakhs.

SRI A. VEDARATHNAM : ஸார், இந்த வேலை நிறுத்தத்தினுல் சர்க்காருக்கு ஏற்பட்ட செலவை ஏழைகள் வரிப் பணத்திலிருந்து சரிக்கட்ட யோசித்திருக்கிறதா அல்லது இந்த வேலை நிறுத்தத்தை தூண்டிய கட்சி காரர்களிடமிருந்து வசூலிக்க உத்தேசித்திருக்கிறதா ? பல அரசியல் கட்சிக்காரர்களுக்கு வெளி நாடுகளிலிருந்து அதிகமான பணம் வருகிறது. அந்தப் பணத்திலிருந்து இது சரிக்கட்டப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கம் செலவு செய்வது, எதிர் பார்க்கப்பட்ட செலவு, எதிர்பாராத செலவு நியாயமான செலவு, அநியாயமான செலவு எல்லாம் ஏற்படும். எந்தச் செலவானுலும் மக்கள் வரிப் பணத்திலிருந்து தான் செலவழிக்கப்படு கிறது. ஆனுல் அங்கத்தினர் சொல்வது போல் ஏதாவது பிரத்தியேகமாக வசூலிக்க வழி இருக்கிறது. இதிலே அந்த முறை கையாளப்படுவதற்கு இடம் இல்லை.

[9th September 1960

**SRI P. S. CHINNADURAI** : இந்த வேலை நிறுத்தத்தின் போது ஏராளமான போலீஸ்காரர்கள், கிராம மணியக்காரர்கள், கணக்குப் பிள்ளைகள், தலையாரிகள் எல்லாம் இதில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றனர். அதன் காரணமாக அரசாங்கமானது அவசியமில்லாத செலவு எவ்வளவாகி இருக்கிறது என்ற கணக்குக் கூடத் தெரியாமல் ஏராளமான பணத்தைச் செலவு செய்திருக்கிறது. இந்தப் பணத்தை மத்திய சர்க்காரிடமிருந்து கட்டாயமாகப் பெறுவதற்கு முயற்சி எடுக்கப்படுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : அவசியமில்லாத செலவு செய்யப்பட்டது என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. எவ்வளவு செலவு செய்யப்பட்டிருந்த போதிலும் அவ்வளவும் மத்திய அரசாங்கத்திடம் இருந்து பெறப்படும் என்று முன்னமேயே தெரிவித்தேன்.

**SRI M. KALYANASUNDARAM** : ஸார், கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஏ. வேதரத்தினம் அவர்கள் சொன்னது போல் பொது மக்கள் வரிப் பணத்திலிருந்து செலவு பண்ணக்கூடாது. இந்த ஸ்ட்ரைக்கைத் தூண்டி விட்ட மத்திய அரசாங்க நிதியமைச்சரிடமிருந்து அந்தப் பணத்தை வசூலிக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமா ?

DEPUTY SPEAKER : I am not going to allow that question. I disallow it.

**SRI T. L. SASIVARNA THEVAR** : இந்த வேலை நிறுத்தத்தை உடைப்பதற்காகப் பெரிய உத்தியோகஸ்தர்களிடம் அட்வான்ஸ் ஆக பணம் கொடுக்கப்பட்டிருந்தது. அந்த வகையில் செலவான பணத்தை மத்திய அரசாங்கத்திடமிருந்து நம்முடைய சர்க்கார் பெறுவதற்கு ஏற்பாடு செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : ஸ்ட்ரைக்கை உடைப்பது என்ற பேச்செல்லாம் எதிர்க் கட்சிக்காரர்களுடைய பேச்சு. நியாயமான வகையில் பொது மக்களின் நன்மையை ஒட்டியே ஸ்ட்ரைக்கைச் சமாளிக்க பணம் செலவு செய்யப்பட்டது. இந்தச் செலவும் இந்த அரசாங்கம் செலவு செய்யவில்லை. மத்திய அரசாங்கம் தான் இதற்குப் பொறுப்பு.

*Radio and Electric apparatus*

* 573 *Q*.—**SRI P. G. MANICKAM** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ரேடியோக்களுக்கும், எலெக்ட்ரானிக் சாதனங்களுக்கும் தேவைப்படும் உறுப்புகளை உற்பத்தி செய்யும் எந்தெந்த ஸ்தாபனங்களுக்கு சென்னை ராஜ்யத்தில் லைசென்ஸ் வழங்கப்பட்டிருக்கின்றன ?

(ஆ) 1960-ம் வருடத்தில் இவ்வித லைசென்ஸ் தேவை என்று எத்தனை ஸ்தாபனங்கள் விண்ணப்பித்தன ?

**THE HON. SRI R. VENKATARAMAN** : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

**SRI P. G. MANICKAM** : ஸார், இவ்வித சாதனங்களை உற்பத்தி செய்ய விரும்புவோர் லைசென்ஸ் எடுப்பது என்றால் 1960-ம் வருஷம் ஜூலை மாதம் 31-ம் தேதிக்குள் விண்ணப்பித்துக் கொள்ள வேண்டுமென்று இந்திய சர்க்கார் வர்த்தக இலாகா தெரிவித்திருக்கிறது. இந்த அறிவிப்பிற்குப் பிறகு இந்திய சர்க்காருக்கோ அல்லது சென்னை ராஜ்ய சர்க்காருக்கோ சீனியர் எஞ்சினியர்களிடமிருந்து எத்தனை விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன ?

**THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் அவர்கள் "எஸன்ஷியாலிடி சர்டிபிகேட்" வாங்குவதையும், லைசென்ஸ் வாங்குவதையும் பற்றிச் சற்றுக் குழப்பம் செய்து கொண்டு விட்டார் என்று நினைக்கிறேன். இவற்றை வெளிநாடுகளிலிருந்து தருவிக்க "எஸன்ஷி

[a] Printed as Appendix III on pages 592-59 , infra.